[6th March 1958

1–30 p.m. Sri S. M. ANNAMALAI : இந்த ராணுவக் கல்லூரிக்கு எந்த அடிப்படையில், எந்த விகிதாசாரத்தில் ஆள் எடுக்கிறார்கள் ?

The Hon. Sri C. SUBRAMANIAM : அங்கே தேர்ந்தெடுப்பதற்கு என்று ஒரு குழு இருக்கிறது. அவர்கள் தேர்ந்தெடுக்கிறார்கள்.

Sri M. P. SUBRAMANIAM : இந்திய ராணுவ சேவையிலே, குறிப்பாக, தமிழர்கள் திறமையுடன் சேவை செய்து வருவதாக அண்மையிலே பாராட்டப்பட்டது. காஷ்மீர் போர் முனையிலும் தமிழர்களின் திறமை பாராட்டப் பெற்றிருக்கிறது. அப்படியிருக்கும்போது, ஆண்டு ஒன்றுக்கு ஒருவர்தான் தேர்ந்தெடுக்கப்படுகிறார் என்றால், அது தமிழர்களில் திறமை பெற்றவர்கள் இல்லை யென்றா, அல்லது மாகாணத்திற்கு இவ்வளவுதான் என்று ஒதுக்கியிருக்கிறார்களா ?

The Hon. Sri C. SUBRAMANIAM : இது ஒரு பள்ளிக்கூடம். இதிலே படித்தவர்கள் மிலிட்டரியில் சேரவேண்டுமென்பது கிடையாது. நேராகவும் சேரலாம். கல்லூரியிலே இடம் குறைவாக இருக்கின்ற காரணத்தினாலே நம்முடைய ராஜ்யத்திற்கு ஒரு இடம்தான் கிடைத்திருக்கிறது. 1958-ல் இரண்டு கிடைத்திருக்கிறது.

Sri C. NATARAJA ODAYAR : இந்தக் கல்லூரிக்குத் தேர்ந்தெடுக்கும்போது, எந்த அடிப்படையில் தேர்ந்தெடுக்கிறார்கள் என்று கேட்பதன் அர்த்தம், அவர்களது யோக்கியதாம்சங்களை வைத்துக்கொண்டா, அல்லது ஜாதியின் அடிப்படையிலா ?

The Hon. Sri C. SUBRAMANIAM : ஜாதிப் பிரச்னையை ஒட்டியதாகத் தெரியவில்லை. இது நம்முடைய அரசாங்கத்தின் நிர்வாகத்தில் இல்லை. இதற்கு மேல் விஷயங்கள் வேண்டுமென்றால், அவர்களுக்கு எழுதித்தான் பதில் சொல்லவேண்டும்.

Sri M. KALYANASUNDARAM : ஒவ்வொரு ராஜ்யத்திற்கும் ஒரு ஆண்டுக்கு இவ்வளவு ஸ்தானங்கள் என்று இந்தக் கல்லூரியில் ஒதுக்குகிறார்களா ? அப்படியானால் நம்முடைய ராஜ்யத்திற்கு எவ்வளவு ஒதுக்கப்பட்டிருக்கிறது. இப்பொழுது ஒதுக்கப்பட்டிருப்பது ராஜ்யத்தின் தேவைக்குப் போதுமானது என்று மந்திரி அவர்கள் அபிப்பிராயப்படுகிறார்களா ?

The Hon. Sri C. SUBRMANIAM : இது ராஜ்யத்தின் தேவைக்காக அல்ல, ராணுவத்தின் தேவைக்காக. முன்பு சொன்னது போல் இதற்கு விண்ணப்பம் போடுகிறவர்கள் மிகவும் குறைச்சல். பணக்காரர்கள்தான் போட முடியும். எந்த அடிப்படையில் ஸ்தானம் ஒதுக்கப்பட்டிருக்கிறது என்பதற்கு என்னிடம் தகவல் இல்லை.

*Industrial Estate*

* 222 *Q.*—Sri S. LAZAR : Will the Hon. the Minister for Industries be pleased to state—

(*a*) the details regarding the Industrial Estate to be started at Tiruchirappalli; and

(*b*) when will it start functioning?

The Hon. Sri R. VENKATARAMAN : (*a*) The Industrial Estate at Tiruchirappalli is estimated to involve an expenditure of about 6 lakhs and will provide built-up factory spaces for 12 Small

6th March 1958]

Scale Industrial Units, with all modern amenities like water and power-supply, etc. The factory units will be let out on rent to start with.

(*b*) The construction of buildings will be taken up immediately after the lands are acquired.

SRI S. LAZAR : May I know whether the lands have been acquired so far?

THE HON. SRI R. VENKATARAMAN : Sir, steps have been taken for the acquisition of land.

SRI A. A. RASHEED : Is there any proposal to start such Industrial Estates in other District Headquarters also?

THE HON. SRI R. VENKATARAMAN : We have a scheme for starting five such industrial colonies. We have already given the names of Marthandam, Tirunelveli, Madurai, Tiruchirappalli and so on.

SRI M. P. SUBRAMANIAM : இந்தத் தொழிற் பண்ணை ஆரம்பிக்கிற விஷயத்திலே எல்லா இடங்களுக்கும் சேவை செய்கிற முறையிலே, மையமாகப் பார்த்து ராஜ்யம் முழுவதும் பல அமைக்க ஏற்பாடு செய்வார்களா ? அப்படி ஒரு "Comprehensive scheme" ஐக் கொண்டு வருவார்களா ?

THE HON SRI R. VENKATARAMAN : இந்த இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்திலே இப்பொழுது தொழிற்பண்ணைகள், காலனிகள், எல்லாம் சேர்த்து ஒன்பது வைக்கப் போகிறோம். அவற்றை ஜில்லா வாரியாக அமைத்துக் கொண்டிருக்கிறோம்.

*Official tours of Ministers*

* 223 *Q*.—SRI S. M. ANNAMALAI : Will the Hon. the Chief Minister be pleased to state whether Ministers participate in Congress Party meetings while touring on official business?

THE HON. SRI C. SUBRAMANIAM : Yes. Some of the Ministers participate occasionally in Congress Party meetings while on tour without detriment to their official work.

SRI S. M. ANNAMALAI : எல்லாக் கட்சி மக்களுடைய வரிப் பணத்தைக் கொண்டு மந்திரிகள் சுற்றுப் பிரயாணம் செய்கிறார்கள். ஒரு கட்சியின் வளர்ச்சிக்காக மக்களின் வரிப் பணத்தைப் பயன்படுத்தலாமா என்று கேட்கிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM : மந்திரிகள் தனியாக காங்கிரஸ் வேலைக்கு என்று போனால் படி வாங்கிக் கொள்வது கிடையாது. வேறு காரியங்களுக்காகப் போகும்போது, இந்த மாதிரிக் கட்சிக் கூட்டத்திற்குப் போவது தவறு இல்லை என்பதைப்பற்றி பரிசீலனை செய்து, எந்தெந்த சமயங்களில் படி வாங்கலாம், எப்பொழுது வாங்கக் கூடாது என்பதற்கு விதிகள் கூட இருக்கின்றன.

SRI A. GOVINDASAMY : அமைச்சர்கள் அரசாங்க வேலையாகப் போகும்பொழுது, அவர்கள் தங்குகின்ற இடங்களிலே கட்சிக் கூட்டங்களை நடத்துகிறார்கள். இப்படிச் செய்வதால், எதிர்க்கட்சிக்காரர்கள் மந்திரிகளை